## कर्मशास्त्रे कुतो ज्ञानं तर्के नैवास्ति निश्चयः ।
## सांख्ययोगौ भिदापन्नौ शाब्दिकाः शब्दतत्पराः ॥ २८ ॥

**கர்மஶாஸ்த்ரே குதோ ஜ்ஞானம் தர்கே நைவாஸ்தி நிஶ்சய꞉ ।**
**ஸாங்க்²யயோகௌ³ பி⁴தா³பன்னௌ ஶாப்³தி³கா꞉ ஶப்³த³தத்பரா꞉ ॥ 28 ॥**

**कर्मशास्त्रे** - கர்மாவை போதிக்கும் சாஸ்திரத்தில்,
**கர்மஶாஸ்த்ரே**
**कुतः** - எப்படி,
**குத꞉**
**ज्ञानं** - ஞானம் (ஏற்படும்?
**ஜ்ஞானம்**
**तर्के** - தர்க்க சாஸ்திரத்தில்,
**தர்கே**
**निश्चयः** - தீர்மானமானது,
**நிஶ்சய꞉**
**न एव अस्ति** - கிடையவே கிடையாது,
**ந ஏவ அஸ்தி**
**सांख्ययोगौ** - ஸாங்க்ய சாஸ்திரமும் யோக
**ஸாங்க்²யயோகௌ³** சாஸ்திரமும்,
**भिदापन्नौ** - வேற்றுமையை ஒப்புக்கொண்டவைகள்,
**பி⁴தா³பன்னௌ**
**शाब्दिकाः** - சப்த விஷயமான வியாகரண
**ஶாப்³தி³கா꞉** சாஸ்திரத்தை அனுஸரிப்பவர்கள்,
**शब्दतत्पराः** - சப்தத்திலேயே ஈடுபட்டவர்கள்.
**ஶப்³த³தத்பரா꞉**

கர்ம சாஸ்திரம் கர்மாவைப்பற்றியே உபதேசிப்பதாலும், தர்க்க சாஸ்திரத்தின் மூலம் ஒருவிதத்தீர்மானமும் ஏற்பட முடியாதபடியாலும் ஸாங்க்ய சாஸ்திரமும் யோக சாஸ்திரமும் வேற்றுமையை ஒப்புக்கொண்டுள்ளபடியாலும், சப்த சாஸ்திரம் சப்தத்திலேயே ஈடுபட்டிருப்பதாலும் இந்த சாஸ்திரங்கள் மூலம் ஐக்ய ஞானம் ஏற்பட வழியில்லை.

[ஆத்மாவை கர்த்தாவென்றும் போக்தாவென்றும் ஒப்புக் கொண்டால்தான் அவனைப்பார்த்து இதைச் செய், இந்த பலனை அடைவாய் என்று சொல்லமுடியும். அவ்விதம் கட்டளையிடும் சாஸ்திரம் மூலம் கர்த்தாவும் போக்தாவுமல்லாத சுத்த சைதன்ய ரூபமான ஆத்மாவின் ஞானம் ஏற்படுவதற்கு இடமேயில்லை. தர்க்கத்தை எடுத்துக்கொண்டால் ஒருவன் தன் யுக்தியினுல் ஒருவிதமாகத் தீர்மானம் செய்தாலும் அவனுக்குமேல் புத்திசாலியாயுள்ள மற்றெருவன் அந்தத்தீர்மானம் யுக்திக்குப்

பொருந்தாது என்று காட்டிவிடமுடியும். ஆகையால் தர்க்க சாஸ்திரத்தின் உதவி யைக்கொண்டு மாற்ற முடியாத ஒரு முடிவிற்கு வருவது ஸாத்தியமாகாது. ஸாங்க் யமும் யோகமும் முன் சொன்னபடி ஜீவனும் ஈசுவரனும் வெவ்வேறு என்றே வைத்துக் கொண்டிருப்பதால் இவ்விருவர்களும் அபேதத்தை போதிக்க முடியாது. சப்த சாஸ்திரத்தில் ஈடுபட்டவர்கள் வார்த்தைகளுடைய வ்யுத்பத்தியுடன் நின்று விடுவார்களே தவிர அர்த்த விசாரத்தில் இறங்குவதில்லை. ஆகவே இந்த சாஸ்திரங்கள் மூலம் அபேத ஞானத்தை அடையமுடியாது.] **(28)**

## अन्ये पाषण्डिनः सर्वे ज्ञान वार्ता सुदुर्लभाः ।
## एकं वेदान्तविज्ञानं स्वानुभूत्या विराजते ॥ २९ ॥

**அன்யே பாஷண்டி³னः ஸர்வே ।**
**ஏகம் வேதா³ந்தவிஜ்ஞானம் ஸ்வானுபூ⁴த்யா விராஜதே ॥ 29 ॥**

| | | |
|---|---|---|
| **अन्ये** **அன்யே** | - | மற்ற, |
| **सर्वे** **ஸர்வே** | - | எல்லாரும், |
| **पाषण्डिनः** **பாஷண்டி³னः** | - | பாஷண்டிகள், |
| **ज्ञान वार्ता सुदुर्लभाः** **ஜ்ஞான வார்தா ஸுது³ர்லபா⁴ः** | - | அவர்களுக்கு ஞானம் என்ற பேச்சே வெகு துர்லபம், |
| **वेदान्तविज्ञानं** **வேதா³ந்தவிஜ்ஞானம்** | - | வேதாந்தத்தினுல் அறியப்படும் ஞானம், |
| **एकं** **ஏகம்** | - | ஒன்றுதான், |
| **स्वानुभूत्या** **ஸ்வானுபூ⁴த்யா** | - | தன்னுடைய அனுபவத்திற்கு விஷயமாகி, |
| **विराजते** **விராஜதே** | - | பிரகாசிக்கின்றது |

மற்ற எல்லாரும் பாஷண்டிகள். அவர்களுக்கு ஞானம் என்ற பேச்சே வெகு துர்லபம். வேதாந்தத்தினுல் அறியப்படும் ஞானம் ஒன்றுதான் தன்னுடைய அனுபவ த்திற்கு விஷயமாகி பிரகாசிக்கிறது.

[வேதம் பிரமாணம் என்று ஒப்புக்கொள்ளும் ஆஸ்திகர்களான சாஸ்திரகாரர் களே ஜீவேசுவர ஐக்கிய ஞானத்தையடைய முடியாதென்றுல், வேதவிருத்தமான மார்க்கங்களில் இருந்து வருகிறவர்களுக்கு இந்த ஞானம் வெகு துர்லபமேயாகும். ஆகவே வேதாந்தம் மூலம் தான் ஐக்யஞானம் உண்டாகும் அதுதான் ஸ்வாநுபவத்து டன் விளங்கும்.] **(29)**

**(அவதாரிகை)** இவ்விதம் வேதாந்தத்தினுல் போதிக்கப்பட்டு ஸ்வானுபவத்தினுல் ஸாக்ஷாத்கரிக்கப்படும் ஞானத்தின் ஸ்வரூபம் மேல் சுலோகங்களில் விவரிக்கப்படுகிறது: -

**अहं ममेत्ययं बन्धो ममाहं नेति मुक्तता ।**
**बन्धमोक्षौ गुणैर्भातो गुणाः प्रकृतिसंभवाः ॥ ३० ॥**

**அஹம் மமேத்யயம் ப³ந்தோ⁴ மமாஹம் நேதி முக்ததா ।**
**ப³ந்த⁴மோக்ஷௌ கு³ணைர்பா⁴தோ கு³ணா: ப்ரக்ருதிஸம்ப⁴வா: ॥ 30 ॥**

**अहं** - நான்,
**அஹம்**
**मम** - என்னுடையது,
**மம**
**इति** - என்று,
**இதி**
**अयं** - (உள்ள) இது,
**அயம்**
**बन्धः** - பந்தமாகும்,
**ப³ந்த⁴:**
**मम** - என்னுடையது,
**மம**
**अहं** - நான், (ஆகிய இரண்டும்),
**அஹம்**
**न** - இல்லை,
**ந**
**इति** - என்றால்,
**இதி**
**मुक्तता** - விடுபட்ட தன்மையாகும்,
**முக்ததா**
**बन्धमोक्षौ** - பந்தமும் மோக்ஷமும்,
**ப³ந்த⁴மோக்ஷௌ**
**गुणैः** - குணங்களினால்தான்,
**கு³ணை:**
**भातः** - தோன்றுகின்றன,
**பா⁴த:**
**गुणाः** - அக்குணங்கள்,
**கு³ணா:**

**प्रकृतिसंभवाः** - பிரகிருதியினுல் ஏற்பட்டவைகள்.

**ப்ரக்ருதிஸம்ப⁴வாः**

ஆத்மாவல்லாத வஸ்துக்களை நான் என்றும் என்னுடையது என்றும் எண்ணுவது தான் பந்தமாகும். இவ்விரண்டும் நீங்கிவிட்டால் அதுவே முக்தியாகும் மாயையினுல் ஏற்பட்ட குணங்களால்தான் இந்த பந்த மோக்ஷங்கள் தோன்றுகின்றன்.

[நான் அல்லாத சரீராதிகளில் நான் என்றும், அதையொட்டி வெளிப்பதார்த்தங்களில் என்னுடையது என்றும், தோன்றுவதினுல் தான் ஸம்ஸாரபந்தம் ஏற்படுகிறது. இவ்விரண்டுவிதத் தோற்றங்களும் இல்லையானுல் பந்தத்திலிருந்து விடுதலை பந்த மோக்ஷங்களுக்கும் அவைகளின் நிமித்தமான தோற்றங்களுக்கும் காரணம் பிரகிருதியின் அம்சங்களாகிய ஸத்வம், ரஜஸ், தமஸ், என்கிற முக்குணங்களேயாகும். அக்குணங்களுக்குக்கட்டுப்படாமலிருந்துவிட்டால் பந்தமோக்ஷமென்ற வியவஸ்தையே விலகி விடும்.] **(30)**

**ज्ञानमेकं सदा भाति सर्वावस्थासु निर्मलम् ।**
**मन्दभाग्या न जानन्ति स्वरूपं केवलं बृहत् ॥ ३१ ॥**

**ஜ்ஞானமேகம் ஸதா³ பா⁴தி ஸர்வாவஸ்தா²ஸு நிர்மலம் ।**
**மந்த³பா⁴க்³யா ந ஜானந்தி ஸ்வரூபம் கேவலம் ப்³ருஹத் ॥ 31 ॥**

**ज्ञानं** - ஞானமானது,

**ஜ்ஞானம்**

**एकं** - ஒரேவிதமாய்,

**ஏகம்**

**निर्मलं** - நிர்மலமாய்,

**நிர்மலம்**

**सर्वावस्थासु** - எல்லா நிலைகளிலும்,

**ஸர்வாவஸ்தா²ஸு**

**सदा** - எப்பொழுதும்,

**ஸதா³**

**भाति** - பிரகாசித்துக்கொண்டிருக்கிறது,

**பா⁴தி** (இவ்விதம் பிரகாசிக்கிற),

**केवलं** - தனித்து உள்ள,

**கேவலம்**

**बृहत्** - பெரியதான,

**ப்³ருஹத்**

**स्वरूपं** - தன்னுடைய ஸ்வரூபத்தை,

**ஸ்வரூபம்**

| | | |
|---|---|---|
| **मन्दभाग्या:** <br> **மந்த³பா⁴க்³யா** | - | பாக்யமில்லாதவர்கள், |
| **न जानन्ति** <br> **ந ஜானந்தி** | - | அறிகிறதில்லை. |

ஞானமானது ஒரேவிதமாய் நிர்மலமாய் எல்லா நிலைகளிலும் எப்பொழுதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. இவ்விதம் பிரகாசிக்கிற தனித்து உள்ள பெரியதான தன்னுடைய ஸ்வரூபத்தை பாக்யமில்லாதவர்கள் அறிகிறதில்லை.

[ நமக்கு எப்பொழுதும் எல்லாநிலைகளிலும் ஏதாவதொரு ஞானம் ஏற்பட்டுக் கொண்டுதான் இருக்கிறது. ஏதாவதொரு விஷயத்தை அறிந்துகொண்டு தானிருக்கிறோம். ஆனல் இந்த ஞானம் தொடர்ச்சியாக இல்லாமலும் மற்றதுடன் சேர்ந்தும் தான் இருக்கிறது பாக்யமுள்ளவர்களுக்கு இந்த ஞானம் ஒரே விதமாய் பரிசுத்தமாய் ஒன்றுடனும் சேராமல் தனித்து அகண்டமாக பிரகாசிக்கிறது பாக்யமில்லாதவர்களுக்கு இம்மாதிரி பிரகாசிப்பதில்லை.] **(31)**

## संकल्पसाक्षि यज्ज्ञानं सर्वलोकैकजीवनम् ।
## तदेवास्मीति यो वेद स मुक्तो नात्र संशयः ॥ ३२ ॥

**ஸங்கல்பஸாக்ஷி யஜ்ஜ்ஞானம் ஸர்வலோகைகஜீவனம் ।**
**ததே³வாஸ்மீதி யோ வேத³ ஸ முக்தோ நாத்ர ஸம்ஶய꞉ ॥ 32 ॥**

| | | |
|---|---|---|
| **संकल्पसाक्षि** <br> **ஸங்கல்பஸாக்ஷி** | - | மனதில் தோன்றும் எண்ணங்களை யெல் லாம் ஸாக்ஷியாயிருந்து பார்த்துக் கொண்டும், |
| **सर्वलोकैकजीवनम्** <br> **ஸர்வலோகைகஜீவனம்** | - | எல்லா பிராணிகளையும் உயிர்ப்பித்துக் கொடுக்கும் ஒரே காரணமாயும் இருக்கிற, |
| **यत्** <br> **யத்** | - | எந்த, |
| **ज्ञानं** <br> **ஜ்ஞானம்** | - | ஞானஸ்வரூபமான ஆத்மா உண்டோ, |
| **तत् एव** <br> **தத் ஏவ** | - | அதுவாகவே, |
| **अस्मि** <br> **அஸ்மி** | - | நான் இருக்கிறேன், |
| **इति** <br> **இதி** | - | என்று, |
| **य:** <br> **ய꞉** | - | எவன், |

**वेद** - அறிகிறனோ,

**வேத³**

**स:** - அவன்,

**ஸ:**

**मुक्त:** - விடுபட்டவன்,

**முக்த:**

**अत्र** - இந்த விஷயத்தில்,

**அத்ர**

**संशय:** - ஸந்தேஹம்,

**ஸம்ஶய:**

**न** - கிடையாது.

**ந**

மனதில் தோன்றும் எண்ணங்களையெல்லாம் ஸாக்ஷியாயிருந்து அறிந்து கொண்டு எல்லா பிராணிகளும் ஜீவிப்பதற்கு ஒரே காரணமாக இருக்கிற ஞான ஸ்வரூபமான ஆத்மாவாகவே நான் இருக்கிறேன் என்று அறிகிறவன் விடுபட்டவன், இந்த விஷயத்தில் ஸந்தேஹம் கிடையாது. **(32)**

(**அவதாரிகை**) ஆத்ம ஸ்வரூபத்தையறிகிறவன் முக்தன் என்று சொன்ன படியால் அந்த ஸ்வரூபத்தை அறிவதற்கு என்ன ஸாதனம் என்ற கேள்வி பிறக்கிறது. அது ஸ்வயம்பிரகாசமானதினுல் அதை அறிய ஸாதனங்களுடைய அபேக்ஷை கிடையாது. மற்ற பதார்த்தங்களை அறிவதற்கும் ஆத்மாவை அறிவதற் கும் வித்யாஸம் உண்டு என்பதை மேலால் எடுத்துக் காட்டுகிறுர்: -

**प्रमाता च प्रमाणं च प्रमेयं प्रमितिस्तथा ।**
**यस्य भासावभासन्ते मानं ज्ञानाय तस्य किम् ॥ ३३ ॥**

**ப்ரமாதா ச ப்ரமாணம் ச ப்ரமேயம் ப்ரமிதிஸ்ததா² ।**
**யஸ்ய பா⁴ஸாவபா⁴ஸந்தே மானம் ஜ்ஞானுய தஸ்ய கிம் ॥ 33 ॥**

**प्रमाता च** - அறிகிறவனும்,

**ப்ரமாதா ச**

**प्रमाणं च** - அறிவின் ஸாதனமும்,

**ப்ரமாணம் ச**

**प्रमेयं** - அறியப்படும் விஷயமும்,

**ப்ரமேயம்**

**तथा** - அப்படியே,

**ததா²**

**प्रमितिः** - அறிகிறதென்ற புத்தியின் விருத்தியும்,
**ப்ரமிதி꞉**
**यस्य** - எவருடைய,
**யஸ்ய**
**भासा** - பிரகாசத்திஞல்,
**பா⁴ஸா**
**अवभासन्ते** - பிரகாசிக்கின்றனவோ,
**அவபா⁴ஸந்தே**
**तस्य** - அவருடைய,
**தஸ்ய**
**ज्ञानायं** - ஞானத்தை யுத்தேசித்து,
**ஜ்ஞாஞயம்**
**मानं** - அறிவின் ஸாதனம்,
**மானம்**
**किं** - என்ன இருக்கமுடியும்?
**கிம்**

அறிகிறவன், அறிவின் ஸாதனங்கள், அறியப்படும் விஷயம் அறிவு அதாவது புத்திவிருத்தி இவைகளெல்லாவற்றையும் கூட பிரகாசப்படுத்துகிற ஞான ஸ்வரூப மான ஆத்மாவை அறிந்து கொள்ள அவரைத்தவிற வேறு என்ன ஸாதனம் இருக்க முடியும்?

[ஒரு இருட்டு அறையிலுள்ள பதார்த்தத்தைப்பார்ப்பதற்காக வெளிச்சம் தேவைப்படுகிறது. அவ்வெளிச்சத்திஞல் பார்க்கிறவன், விளக்கு. பார்க்கப்படும் பதார்த்தம், வெளிச்சம் பதார்த்தத்தின் பேரில் பட்டிருப்பது, என்கிற நான்கு அம்சங்க ளும் தெரிகின்றன. பார்க்கப்படவேண்டிய பதார்த்தம் வெளிச்சமாகவேயிருந்தால், அதைப்பார்க்க வேறு வெளிச்சம் வேண்டியதில்லை. ஒரு அறையில் தீபம் எரிகிறதா என்று பார்ப்பதற்கு அந்த தீபத்தின் பேரில் பட்டு அதை விளங்கும்படி செய்வதற்கு வேறு வெளிச்சம் தேவையில்லை. அப்படியே ஆத்மாவல்லாத ஜடமான பதார்த்தங் களை அறிவதற்கு ஆத்மாவின் வெளிச்சம் தேவை. ஞான ன்வரூபமான ஆத்மாவை யே பார்க்கவேண்டுமாஞல் அது ஸ்வயம்பிரகாசமானதிஞல் அதற்கு ஸாதனம் தேவையேயில்லை.] **(33)**

**अर्थाकारा भवेद् वृत्तिः फलेनार्थः प्रकाशते ।**
**अर्थज्ञानं विजानाति स एवार्थः प्रकाशते ॥ ३४ ॥**

**அர்தா²காரா ப⁴வேத்³ வ்ருத்தி꞉ ப²லேஞர்த²꞉ ப்ரகாஶதே ।**
**அர்த²ஜ்ஞானம் விஜாஞதி ஸ ஏவார்த²꞉ ப்ரகாஶதே ॥ 34 ॥**

| | | |
|---|---|---|
| **वृत्तिः** **வ்ருத்தி:** | - | புத்தியினுடைய விருத்தியானது (விஷயத்தை நோக்கிச்சென்று), |
| **अर्थाकारा** **அர்தா²காரா** | - | விஷயத்தின் ஆகாரத்தையே எடுத்துக்கொண்டதாக, |
| **भवेत्** **ப⁴வேத்** | - | ஆகும், |
| **फलेन** **ப²லேன** | - | சைதன்யத்தால், |
| **अर्थः** **அர்த²:** | - | விஷயமானது, |
| **प्रकाशते** **ப்ரகாஶதே** | - | தெரிகிறது, |
| **अर्थज्ञानं** **அர்த²ஜ்ஞானம்** | - | விஷய ஞானமானது தனக்கு ஏற்பட்டிருக்கிறதென்பதை, |
| **विजानाति** **விஜாஞதி** | - | நன்கு அறிகிறுன், |
| **अर्थः** **அர்த²:** | - | விஷயம், |
| **प्रकाशते** **ப்ரகாஶதே** | - | பிரகாசிக்கிறது என்பது, |
| **स एव** **ஸ ஏவ** | - | அதுவேதான். |

அந்தக்கரணமானது விஷயத்தை நோக்கிச்சென்று விஷயத்தின் ஆகாரத்து டன் கூடினதாக ஆகிறது. சைதன்யத்தால் விஷயம் பிரகாசிக்கிறது பிறகு தனக்கு விஷயஞானம் ஏற்பட்டிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்கிறுன். இதுதான் விஷயம் ப்ரகாசிக்கிறது என்பது.

[ உலகில் ஒவ்வொரு நிமிஷமும் நாம் எத்தஊயோ பொருள்கஊப் பார்த்துத் தெரிந்துகொள்கிறேம். நாம் கண்ணுல் பார்க்காதவரை நமக்குத்தெரியாமலிருந்த பொருஊ நாம் கண்ணுல் பார்த்ததும் அறிந்து கொள்கிறேம். அப்பொழுது இது குடம் என்ற அறிவு நமக்கு ஏற்படுகிறது. இதை இந்த சுலோகத்தில் விவரித்துக்காட்டுகிறர். அதாவது நாம் கண்ணுல் குடத்தைப் பார்த்ததும் நம்முள் இருக்கிற மனமானது கண்வழியாக வெளியில் சூரியகிரணம்போல் நீண்டு சென்று குடத்தை வியாபித்து குடத்தின் உருவத்தை அடைந்துவிடுகிறது. நதியிலுள்ள நீர் வாய்க்கால் வழியாகச் சென்று வயஊ அடைந்து வயல் முழுவதும் பரவி வயலின் ஆகாரத்தை அடைந்து விடுகிறதல்லவா! இதையே திருஷ்டாந்தமாக எடுத்துக்கொள்ளலாம். விஷயாகாரத் தை அந்தக்கரணம் அடைவதைத்தான் அந்தக்கரண விருத்தி என்று சொல்கிறர்கள். இந்த விருத்தியினுல் ஆவரணம் அதாவது மறைவு நீங்குகிறது அதன்பிறகு ப்ரகாச

ரூபமான சைதன்யத்தால் குடம் நமக்குத் தெரியவருகிறது. 'இது குடம்' என்று சொல்கிறோம். 'குடத்தை நான் அறிகிறேன்' என்றும் சொல்கிறோம். இதுபோலவேதான் எல்லா விஷயங்களிலும். இதுதான் விஷயத்தை அறிந்துகொள்வது என்பது.] **(34)**

## वृत्तिव्याप्यत्वमेवास्तु फलव्याप्तिः कथं भवेत् ।
## स्वप्रकाशस्वरूपत्वात् सिद्धत्वाच्च चिदात्मनः ॥ ३५ ॥

**வ்ருத்திவ்யாப்யத்வமேவாஸ்து ப²லவ்யாப்தி꞉ கத²ம் ப⁴வேத் ।**
**ஸ்வப்ரகாஶஸ்வரூபத்வாத் ஸித்³த⁴த்வாச்ச சிதா³த்மன꞉ ॥ 35 ॥**

(ஆத்மக்ஞான விஷயத்தில்),

| | | |
|---|---|---|
| **वृत्तिव्याप्यत्वं एव** **வ்ருத்திவ்யாப்யத்வம் ஏவ** | - | விருத்தியினுல் வியாபிக்கப்படும் தன்மை மாத்திரம், |
| **अस्तु** **அஸ்து** | - | இருக்கட்டும், |
| **फलव्याप्तिः** **ப²லவ்யாப்தி꞉** | - | சைதன்யத்தால் வியாபிக்கிறது என்பது, |
| **कथं** **கத²ம்** | - | எப்படி, |
| **भवेत्** **ப⁴வேத்** | - | இருக்கமுடியும்? |
| **चिदात्मनः** **சிதா³த்மன꞉** | - | ஞானஸ்வரூபனான ஆத்மா, |
| **स्वप्रकाशस्वरूपत्वात्** **ஸ்வப்ரகாஶஸ்வரூபத்வாத்** | - | ஸ்வயம் ப்ரகாசஸ்வரூபனுயும், |
| **सिद्धत्वात् च** **ஸித்³த⁴த்வாத் ச** | - | ப்ரஸித்தனுயும் இருப்பதால். |

ஆத்மாவின் ஸ்வரூபம் ஸ்வயம் ப்ரகாசமாயும் ஏற்கெனவே பிரஸித்தமாயும் இருப்பதால் அதில் விருத்தி வ்யாப்தி மட்டும் தான். அதில் சைதன்ய வ்யாப்தி எப்படி இருக்கமுடியும்?

[உலகிலுள்ள எந்த ஜடப்பொருளையும் நாம் தெரிந்து கொள்வதற்கு விருத்தி வ்யாப்தி பலவ்யாப்தி இரண்டும் வேண்டும். அந்தக்கரணம் விஷயமிருக்குமிடம் சென்று விஷயம் முழுவதும் பரவி விஷயாகாரத்தை அடைவது விருத்தி வ்யாப்தி என்பது. சைதன்ய ஸம்பந்தம் பலவ்யாப்தியாகும். இவற்றில் விருத்தி வ்யாப்தியால் ஆவரணம் நீங்குகிறது. பல வியாப்தியால் ஜடமான பொருள் நமக்குத் தெரிய வருகிறது. ஆத்மாவை நாம் தெரிந்துகொள்வதற்கு விருத்தி வியாப்திமட்டும் போதும். பல வ்யாப்தி தேவையில்லை. ஏனெனில் ஆத்மாவை நமக்குத் தெரிய வொட்டாமல் மறைத்துக்கொண்டிருக்கும் ஆவரணம் நீங்க அந்தக்கரண விருத்தி

வ்யாப்தி அவசியம் வேண்டியதுதான். மறைவு நீங்காதவரை ஆத்மா நமக்குத் தெரியாதல்லவா. ஆனாலும் ஆத்மா சைதன்ய ரூபமாய் ஸ்வயம்ப்ரகாசமாய் ப்ரஸித்தமாய் இருப்பதால் வேறொரு சைதன்ய வ்யாப்தி வேண்டியதில்லை. சைதன்யமல்லாத ஜடவஸ்துவைத் தெரிந்து கொள்ளத்தான் சைதன்ய வியாப்தி வேணுமே தவிற, சைதன்யத்தையே தெரிந்து கொள்ள அதுவேண்டாம். இருட்டில் திரைக்குள் இருக்கும் பொருளைப்பார்க்க திரையை நீக்கினால் மட்டும் போதாது. வெளிச்சமும் வேண்டும். ஆனால் திரைக்குள் இருக்கும் வெளிச்சத்தைப்பார்க்க திரையை நீக்கினால் மட்டும் போதும். வேறு வெளிச்சத்தின் உதவி வேண்டாம்.] **(35)**

## चित्तं चैतन्यमात्रेण संयोगाच्चेतनं भवेत् ।
## अर्थादर्थान्तरे वृत्तिर्गन्तुं चलति चान्तरे ।
## निराधारा निर्विकारा या दशा सोन्मनी स्मृता ॥ ३६ ॥

**சித்தம் சைதன்யமாத்ரேண ஸம்யோகா3ச்சேதனம் ப4வேத் ।**
**அர்தா2த்3ர்தா2ந்தரே வ்ருத்திர்க3ந்தும் சலதி சாந்தரே ।**
**நிராதா4ரா நிர்விகாரா யா த3ஶா ஸோன்மனீ ஸ்ம்ருதா ॥ 36 ॥**

**चित्तं** - புத்தியானது,
**சித்தம்**

**चैतन्यमात्रेण** - சுத்த சைதன்யத்தோடு மட்டும்,
**சைதன்யமாத்ரேண**

**संयोगात्** - சேருவதினால்,
**ஸம்யோகா3த்**

**चेतना** - அறிவுள்ளதாக,
**சேதனா**

**भवेत्** - ஆகும்,
**ப4வேத்**

**वृत्तिः** - புத்தி விருத்தியானது,
**வ்ருத்தி:**

**अर्थात्** - ஒரு விஷயத்திலிருந்து,
**அர்தா2த்**

**अर्थान्तरे** - வேறு விஷயத்தில்,
**அர்தா2ந்தரே**

**गन्तुं** - போவதற்காக,
**க3ந்தும்**

**चलति** - அசைகிறது,
**சலதி**

| | | |
|---|---|---|
| **अन्तरे च** **அந்தரே ச** | - | (ஒரு விருத்திக்கும் வேறு விருத்திக்கும்) மத்தியில், |
| **निराधारा** **நிராதா⁴ரா** | - | எவ்வித விஷயத்தையும் ஆசிரயிக்காமல், |
| **निर्विकारा** **நிர்விகாரா** | - | தான் மாறுதலுமடையாமல் இருக்கும், |
| **दशा** **த³ஶா** | - | நிலை, |
| **या** **யா** | - | எதுவோ, |
| **सा** **ஸா** | - | அது, |
| **उन्मनी** **உன்மனீ** | - | "உன்மனி" (மனஸிற்கு மேலானது) என்று, |
| **स्मृता** **ஸ்ம்ருதா** | - | எண்ணப்படுகிறது. |

புத்தியானது சுத்த சைதன்யத்தோடு சேருவதினுல் தான் அறிவுள்ளதாக ஆகும் புத்தி விருத்தியானது ஒரு விஷயத்திலிருந்து வேறு விஷயத்திற்குப் போவதற்காக அசைகிறது. ஒரு விருத்திக்கும் வேறு விருத்திக்கும் மத்தியில் எவ்வித விஷயத்தையும் ஆசிரயிக்காமல், தான் மாறுதலுமடையாமல், இருக்கும் நிலை எதுவோ அது "உன்மனீ" மனஸிற்குமேலானது என்று எண்ணப்படுகிறது.

[எறிக்கப்படும் தன்மையோடு கூடின விறகு எறிக்கும் தன்மையுள்ள அக்னி யோடு சேரும்போது, தானும் வேறு விறகை எறிக்கும் தன்மையை அடைவதுபோல், அறியப்படும் தன்மையுள்ள ஜடமான சித்தம் ஞான ஸ்வரூபமான ஸ்வயம் பிரகாச மான ஆத்ம சைதன்யத்தோடு சேரும்போது, தானும் மற்ற ஜடபதார்த்தங்களை அறியும் தன்மையுள்ளதுபோல் தோன்றுகிறது. அதற்கு ஸ்வபாவமாக அறியும் தன்மை கிடையாது. ஆத்மாவிற்குள்ள அறியும் தன்மை ஸ்வபாவ ஸித்தமாயிருப்ப தால் இன்னொரு பதார்த்தத்தின் சேர்க்கையை அபேக்ஷிக்கிறதில்லை. அது எப்பொழுதும் ஒரேவிதமாய்த்தான் இருக்கும். வியாபகமாயும் இருக்கும். புத்தி விருத்தி தான் சிறியதாயிருப்பதால் ஸமகாலத்தில் பல விஷயங்களை கிரஹிக்க யோக்கியதை இல்லாதபடியால் ஒவ்வொன்றாய் விஷயீகரிக்க வேண்டியிருக்கிறது. ஆத்மாவிற்கு அப்படியல்ல. ஒரு விருத்தி அடங்கி இன்னொரு விருத்தியேற்படுவத ற்கு முன்னுள்ள இடைவெளியில் நிர்விஷயமாய் பிரகாசிக்கும் ஆத்மா நன்கு தெரியவரும். ஆனுல் ஸாதாரணமாக அந்த இடைவெளி ஒரு க்ஷணம்தான் இருக்கும். அதையே அப்யாஸத்தினுல் நீடிக்கும்படிச்செய்து மனஸை விஷய மற்று நிறுத்தினுல் அந்த நிலையை உன்மனீ தசை என்பார்கள்.] **(36)**

## चित्तं चिदिति जानीयात् तकाररहितं यदा ।
## तका विषयाध्यासो जपारागो यथा मणौ ॥ ३७ ॥

**சித்தம் சிதி³தி ஜானீயாத் தகாரரஹிதம் யதா³ ।**
**தகா விஷயாத்⁴யாஸோ ஜபாராகோ³ யதா² மணௌ ॥ 37 ॥**

**चित्तं** - சித்தம்,
**சித்தம்**
**यदा** - எப்பொழுது,
**யதா³**
**तकाररहितं** - "த" என்ற அக்ஷரம் இல்லாமல்
**தகாரரஹிதம்** போகிறதோ அப்பொழுது அதை,
**चित् इति** - "சித்" என்று,
**சித் இதி**
**जानीयात्** - அறியவும், (சித்தை சித்தமாக ஆக்குகிற),
**ஜானீயாத்**
**तकार:** - "த" என்ற அக்ஷரம்,
**தகார**:
**विषयाध्यास:** - விஷயத்தோடு ஒன்றுய்த்தோன்றும்படி
**விஷயாத்⁴யாஸ**: கலப்பது என்பதை குறிக்கும்.
**यथा** - எப்படி,
**யதா²**
**मणौ** - சுத்தமான ஸ்படிகமணியில்,
**மணௌ**
**जपाराग:** - ஜபாபுஷ்பத்தின் (செம்பரத்தம்பூவின்)
**ஜபாராக³**: வர்ணம் தோன்றுகிறதோ (அதேமாதிரி).

சித்தம் எப்பொழுது "த" என்கிற அக்ஷரம் இல்லாமல் போகிறதோ அப்பொழுது அதை "சித்" என்று அறியவும். சித்தை சித்தமாக ஆக்குகிற "த" என்ற அக்ஷரம் விஷயத்தோடு ஒன்றுய்த்தோன்றும்படி கலப்பது என்பதை குறிக்கும். எப்படி சுத்தமான ஸ்படிகமணியில் ஜபா புஷ்பத்தின் வர்ணம் தோன்றுகிறதோ அதே மாதிரி.

[சித்தத்தில் விஷயம் தோன்றுமலிருந்தால் அதுவே சுத்த சைதன்யமான சித் ஆகும் என்று சப்த சமத்காரத்திஞல் இங்கு போதிக்கிறார்.] **(37)**

## ज्ञेयवस्तु परित्यागात् ज्ञानं तिष्ठति केवलम् ।
## त्रिपुटी क्षीणतामेति ब्रह्मनिर्वाणमृच्छति ॥ ३८ ॥

**ஜ்ஞேயவஸ்து பரித்யாகா$^{3}$த் ஜ்ஞானம் திஷ்ட$^{2}$தி கேவலம் ।**
**த்ரிபுடீ க்ஷீணதாமேதி ப்$^{3}$ரஹ்மநிர்வாணம்ருச்ச$^{2}$தி ॥ 38 ॥**

| | | |
|---|---|---|
| **ज्ञेयवस्तु परित्यागात्** ஜ்ஞேயவஸ்து பரித்யாகா$^{3}$த் | - | அறியப்படும் பதார்த்தத்தை விட்டு விட்டால், |
| **ज्ञानं** ஞானம் | - | ஞானம், |
| **केवलं** கேவலம் | - | தனித்து, |
| **तिष्ठति** திஷ்ட$^{2}$தி | - | நிற்கும், |
| **त्रिपुटी** த்ரிபுடீ | - | அறிகிற ஞாதா, அறியப்படும் ஜ்ஞேயம், அறிகிற கிரியையான ஞானம், இம்மூன்றும், |
| **क्षीणतां** க்ஷீணதாம் | - | நாசமடைந்த நிலையை, |
| **एति** ஏதி | - | அடைந்துவிடும், அப்பொழுது, |
| **ब्रह्मनिर्वाणं** ப்$^{3}$ரஹ்மநிர்வாணம் | - | பிரஹ்மானந்தத்தை, |
| **ऋच्छति** ருச்ச$^{2}$தி | - | அடைகிறன். |

அறியப்படும் பதார்த்தத்தை விட்டு விட்டால் ஞானம் தனித்து நிற்கும். அறிகிற ஞாதா, அறியப்படும் ஜ்ஞேயம், அறிகிற கிரியையான ஞானம், இம்மூன்றும் நாசமடைந்துவிடும். அப்பொழுது பிரஹ்மானந்தத்தை அடைகிறன்.

[ ஸூர்ய வெளிச்சத்தில் ஒரு பதார்த்தத்தை வைத்தால், ஸூர்யன் அதை பிரகாசப்படுத்துகிறவர், அது பிரகாசப்படுத்தப்பட்ட வஸ்து, பிரகாசப்படுத்துகிறதென்ற வியாபாரம். ஆக மூன்றும் ஏற்படும். இதையே த்ரிபுடீ என்பார்கள். வெளிச்சத்திலிருந்து அப்பதார்த்தத்தை எடுத்துவிட்டால் இம்மூன்று வியவஹாரங்களும் நின்றுவிடும் இவ்வியவஹாரங்கள் நின்றுலும் ஸூர்யன் எப்பொழுதும்போல் பிரகாசித்துக் கொண்டேயிருப்பதால் அவருடைய பிரகாச ஸ்வரூபத்திற்கு எவ்விதக் குறைவும் கிடையாது. அது முன்போல் வியாபகமாகவே இருந்துவரும். அதுபோலவே ஆத்மாவிற்கு அறியப்படும் பதார்த்தம் தோன்றுததினுல் அவருடைய ஸ்வபாவ ஸித்தமான ஞான ஸ்வரூபத்திற்கு எவ்விதக் குறைவும் கிடையாது. அந்த ஸ்வரூப ஞானம் வியாபகமாகவே இருக்கும்.] **(38)**

**मनोमात्रमिदं सर्वं तन्मनो ज्ञानमात्रकम् ।**
**अज्ञानं भ्रम इत्याहुर्विज्ञानं परमं पदम् ॥ ३९ ॥**

**மனோமாத்ரமித³ம் ஸர்வம் தன்மனோ ஜ்ஞானமாத்ரகம் ।**
**அஜ்ஞானம் ப்⁴ரம இத்யாஹுர்விஜ்ஞானம் பரமம் பத³ம் ॥ 39 ॥**

**इदं** - இந்த,
**இத³ம்**
**सर्वं** - எல்லாம்,
**ஸர்வம்**
**मनोमात्रं** - மனஸ்தான்,
**மனோமாத்ரம்**
**तत्** - அந்த,
**தத்**
**मनः** - மனஸ்,
**மன:**
**ज्ञानमात्रकं** - அறிவேதான்,
**ஜ்ஞானமாத்ரகம்**
**अज्ञानं** - அறியாமை,
**அஜ்ஞானம்**
**भ्रमः** - பிராந்தி,
**ப்⁴ரம:**
**विज्ञानं** - ஸாக்ஷாத்காரம்,
**விஜ்ஞானம்**
**परमं** - மேலான,
**பரமம்**
**पदं** - நிலை,
**பத³ம்**
**इति** - என்று,
**இதி**
**आहुः** - சொல்கிறார்கள்.
**ஆஹு:**

இந்த ஜகத் எல்லாம் மனஸ்தான். அந்த மனஸ் அறிவே தான், அறியாமை பிராந்தி, ஸாக்ஷாத்காரம் மேலான நிலை, என்று சொல்கிறார்கள்.

[மனஸ் இல்லையானால் இரண்டாவது பதார்த்தம் தோன்றாது. மனஸ் ஸ்வபாவத்தில் ஜடமானபடியால் ஞான ஸ்வரூபனான ஆத்மா இல்லையானால் மனஸ் எதையும் காணமுடியாது. அறியாமையினால் மனஸ்ஸையும் ஆத்மாவையும் ஒன்று

படுத்தினதினுல்தான் ஜகத் தோன்றுகிறது. அந்த அறியாமை நீங்கி சுத்தமான ஆத்ம ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டால் அதற்கு மேல் உத்தமமான நிஜல கிடையாது.]
**(39)**

**अज्ञानं चान्यथाज्ञानं मायामेतां वदन्ति ते ।**
**ईश्वरं मायिनं विद्यात् मायातीतं निरञ्जनम् ॥ ४० ॥**

**அஜ்ஞானம் சான்யதா[2]ஜ்ஞானம் மாயாமேதாம் வத[3]ந்தி தே ।**
**ஈஶ்வரம் மாயினம் வித்[3]யாத் மாயாதீதம் நிரஞ்ஜனம் ॥ 40 ॥**

| | | |
|---|---|---|
| **अज्ञानं च** | - | அக்ஞானமென்பது, |
| **அஜ்ஞானம் ச** | | |
| **अन्यथाज्ञानं** | - | விபரீதமாக அறிந்துகொள்வது, |
| **அன்யதா[2]ஜ்ஞானம்** | | |
| **एतां** | - | இதை, |
| **ஏதாம்** | | |
| **मायां** | - | மாயையாக, |
| **மாயாம்** | | |
| **ते** | - | அவர்கள் (பெரியோர்கள்), |
| **தே** | | |
| **वदन्ति** | - | சொல்கிறுர்கள், |
| **வத[3]ந்தி** | | |
| **मायिनं** | - | மாயையை உபாதியாயுள்ள சைதன்யத்தை, |
| **மாயினம்** | | |
| **ईश्वरं** | - | ஈசுவரன் என்றும், |
| **ஈஶ்வரம்** | | |
| **मायातीतं** | - | மாயைக்கு அதீதமாயுள்ள சைதன்யத்தை, |
| **மாயாதீதம்** | | |
| **निरञ्जनम्** | - | சுத்த ப்ரஹ்மம் என்றும், |
| **நிரஞ்ஜனம்** | | |
| **विद्यात्** | - | அறிய வேண்டும். |
| **வித்[3]யாத்** | | |

விபரீதமாகத் தெரிந்துகொள்வதுதான் அக்ஞானம் என்பது இதையே மாயை என்று பெரியோர்கள் சொல்கிறுர்கள். இந்த மாயையைத் தன் வசப்படுத்திக்கொண்டு அத்துடன் கூடியவர் ஈசுவரன். மாயைக்கு அதீதமாயுள்ளது எவ்வித தோஷமுமற்ற சுத்த ப்ரஹ்மம். **(40)**

**(அவதாரிகை)** மாயைக்கு உட்பட்டவன் ஜீவன். மாயையோடு கூடி அதைத் தன் வசப்படுத்திக்கொண்டிருப்பவன் ஈசுவரன். மாயையின் ஸம்பந்தமில்லாமலிருப்பது சுத்த சைதன்யம் என்ற இவ்விஷயத்தை ஒரு ரூபகத்தினுல் விளக்குகிறுர்: -

**सदानन्दे चिदाकाशे माया मेघस्तटिन्मनः ।**
**अहंता गर्जनं तत्र धारासारा हि वृत्तयः ॥ ४१ ॥**

**ஸதா³னந்தே³ சிதா³காஶே மாயா மேக⁴ஸ்தடின்மன: ।**
**அஹந்தா க³ர்ஜனம் தத்ர தா⁴ராஸாரா ஹி வ்ருத்தய: ॥ 41 ॥**

**महामोहान्धकारेऽस्मिन् देवो वर्षति लीलया ।**
**तस्या वृष्टेर्विरामाय प्रबोधकसमीरणः ॥ ४२ ॥**

**மஹாமோஹாந்த⁴காரே(அ)ஸ்மின் தே³வோ வர்ஷதி லீலயா ।**
**தஸ்யா வ்ருஷ்டேர்விராமாய ப்ரபோ³த⁴கஸமீரண: ॥ 42 ॥**

**सदानन्दे** **ஸதா³னந்தே³** - ஸத்தாகவும் ஆனந்தமாகவும்,

**चिदाकाशे** **சிதா³காஶே** - சித்தாகவுமுள்ள ஆகாசத்தில்,

**माया** **மாயா** - மாயை என்பது,

**मेघः** **மேக⁴:** - மேகம்,

**मनः** **மன:** - மனஸானது,

**तटित्** **தடித்** - மின்னல்,

**तत्र** **தத்ர** - அந்த மேகத்தில்,

**अहंता** **அஹந்தா** - அஹங்காரம் என்பது,

**गर्जनं** **க³ர்ஜனம்** - கர்ஜனம் (இடி),

**वृत्तयः हि** **வ்ருத்தய: ஹி** - புத்தி விருத்திகள் தான்,

**धारासाराः** **தா⁴ராஸாரா:** - தாரையாகப்பெய்யும் மழை,

**अस्मिन्** - இந்த,
**அஸ்மின்**
**महामोहान्धकारे** - மஹா மோஹமாகிற இருட்டில்,
**மஹாமோஹாந்த⁴காரே**
**देवः** - ஸ்வயம்ப்ரகாசமான பரமாத்மா,
**தே³வ꞉**
**लीलया** - விளையாட்டாக,
**லீலயா**
**वर्षति** - பெய்கிறார்,
**வர்ஷதி**
**तस्याः** - அந்த,
**தஸ்யா꞉**
**वृष्टेः** - மழை பெய்தல்,
**வ்ருஷ்டே꞉**
**विरामाय** - நிற்பதற்காக,
**விராமாய**
**प्रबोधकसमीरणः** - நல்ல ஞானம் என்ற ஒரே காற்றுதான்
**ப்ரபோ³த⁴கஸமீரண꞉** (உபயோகப்படும்).

[ பரிசுத்தமாயிருந்த ஆகாசத்தில் திடீரென்று மேகங்கள் உண்டாகி மின்னலுடனும் இடியுடனும் கூட இருளும் சேர்ந்து மழையைப் பொழிகிறது. மழைக்குக் காரணமான தேவதை தேவேந்திரன். பெருங்காற்று வந்து மேகங்களைச் சிதறடித்து விட்டால் மழை நின்றுவிடுகிறது. இதுபோல ஸச்சிதானந்த ரூபமான ப்ரஹ்மத்தில் மாயை ஏற்பட்டு அதிலிருந்து மனம், அஹங்காரம், புத்தி விருத்திகள் எல்லாம் ஏற்படுகின்றன. மஹா மோஹமும் சேருகிறது. மாயாவியான பரமாத்மாதான் விளையாட்டாக இவைகளை ஏற்படுத்துகிறார். ப்ரஹ்மஞானத்தால் தான் இவை நீங்கும். இங்கு ஸச்சிதானந்த ரூபமான ப்ரஹ்மம் ஆகாசம். மாயை மேகம். மனம் மின்னல். அஹங்காரம் இடி. ஈசுவரன் தேவேந்திரன். மனோவிருத்திகள் மழை. மஹா மோஹம் இருள். ப்ரஹ்மஞானம் காற்று.] **(41-42)**

**(அவதாரிகை)** அந்த ஞானத்தின் ஸ்வரூபத்தையும் அது இருவகைப்படுமென்பதையும் மேல் சுலோகங்களில் விளக்குகிறார்: -

**ज्ञानं दृग्दृश्ययोर्भानं विज्ञानं दृश्यशून्यता |**
**एकमेवाद्वयं ब्रह्म नेह नानाऽस्ति किंचन ॥ ४३ ॥**

**ஜ்ஞானம் த்³ருக்³த்³ருஶ்யயோர்பா⁴னம் விஜ்ஞானம் த்³ருஶ்யஶூன்யதா ।**
**ஏகமேவாத்³வயம் ப்³ரஹ்ம நேஹ நானா(அ)ஸ்தி கிஞ்சன ॥ 43 ॥**

**दृग्दृश्ययो** - பார்க்கிற சேதனனான ஆத்மாவும்

**த்³ருக்³த்³ருஶ்யயோ** பார்க்கப்படுகிற ஜடமான பிரபஞ்சமும்,

**भानं** - தனித்தனியே தோன்றுவது,

**பா⁴னம்**

**ज्ञानं** - ஞானம்,

**ஜ்ஞானம்**

**दृश्यशून्यता** - பார்க்கப்படும் ஜடமான பிரபஞ்சம்

**த்³ருஶ்யஶூன்யதா** மறைந்துவிடுவது,

**विज्ञानं** - விக்ஞானம். (அந்த நிலையில் பார்க்கிறவன்

**விஜ்ஞானம்** என்ற வியவஹாரமும் இல்லாததினுல்),

**अद्वयं** - இரண்டற்றதாக,

**அத்³வயம்**

**ब्रह्म** - பிரஹ்மம்,

**ப்³ரஹ்ம**

**एकं एव** - ஒன்றுதான் உண்டு,

**ஏகம் ஏவ**

**इह** - இந்த ப்ரஹ்மத்தினிடத்தில்,

**இஹ**

**नाना** - வேற்றுமையானது,

**நாநா**

**किंचन** - கொஞ்சமேனும்,

**கிஞ்சன**

**न अस्ति** - கிடையாது.

**ந அஸ்தி**

1. பார்க்கிற சேதனனுன ஆத்மாவும் பார்க்கப்படுகிற ஜடமான பிரபஞ்சமும் தனித்தனியே தோன்றுவது ஞானம். பார்க்கப்படும் ஜடமான பிரபஞ்சம் மறைந்து விடுவது விக்ஞானம் அந்த நிலையில் பார்க்கிறவன் என்ற வியவஹாரமும் இல்லாததினுல் இரண்டற்ற பிரஹ்மம் ஒன்றுதான் உண்டு. இந்த பிரஹ்மத்தில் வேற்றுமையானது கொஞ்சமேனும் கிடையாது. **(43)**

(**அவதாரிகை**) ஞானம் என்பது ஸாதாரண ஞானம் என்றும் விக்ஞானம் என்பது விசேஷ ஞானம் என்றும் சொல்லிவிட்டு அந்த பதங்களுக்கே வேறு விதமாகவும் பலவிதமாகவும் பொருள் சொல்லலாமென்பதை மேலால் காட்டுகிறர்:-

**क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं तज्ज्ञानं ज्ञानमुच्यते ।**
**विज्ञानं चोभयोरैक्यं क्षेत्रज्ञपरमात्मनोः ॥ ४४ ॥**

**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞானம் தஜ்ஜ்ஞானம் ஜ்ஞானமுச்யதே ।**
**விஜ்ஞானம் சோப⁴யோரைக்யம் க்ஷேத்ரஜ்ஞபரமாத்மனோ꞉ ॥ 44 ॥**

| | | |
|---|---|---|
| **क्षेत्रक्षेत्रज्ञयो:** **க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ꞉** | - | தேஹாதிகளான க்ஷேத்திரத்தையும் அதையறிகிற க்ஷேத்திரக்ஞனையும், |
| **ज्ञानं** **ஜ்ஞானம்** | - | அறிவது எதுவோ, |
| **तत्** **தத்** | - | அந்த, |
| **ज्ञानं** **ஜ்ஞானம்** | - | அறிவு, |
| **ज्ञानं** **ஜ்ஞானம்** | - | ஞானம் என்று, |
| **उच्यते** **உச்யதே** | - | சொல்லப்படுகிறது, |
| **विज्ञानं च** **விஜ்ஞானம் ச** | - | விச்ஞானமோ, |
| **क्षेत्रज्ञपरमात्मनो:** **க்ஷேத்ரஜ்ஞபரமாத்மனோ꞉** | - | க்ஷேத்திரக்ஞன் பரமாத்மா, |
| **उभयो:** **உப⁴யோ꞉** | - | இவ்விருவருக்குமுள்ள, |
| **ऐक्यं** **ஐக்யம்** | - | ஐக்கியம். |

**2.** தேஹாதிகளான க்ஷேத்திரத்தையும் அதையறிகிற க்ஷேத்திரக்ஞனையும் அறிவது எதுவோ அந்த அறிவு ஞானம் என்று சொல்லப்படுகிறது. விக்ஞானமோ க்ஷேத்திரக்ஞன் பரமாத்மா இவ்விருவருக்குமுள்ள ஐக்கியம்.

[ முன் சுலோகத்தில் திருக் (பார்க்கிறவன்) என்று சொல்லியதையே இங்கே க்ஷேத்திரக்ஞன் என்றும், திருச்யம் (பார்க்கப்படும் வஸ்து) என்று சொன்னதையே இங்கே க்ஷேத்ரம் என்றும் சொல்லியிருக்கிறுர். முன் சுலோகத்தில் திருச்யத்திற்கு மறைவு சொல்லி பிரஹ்ம பதார்த்தம் மிஞ்சுவதாக சொன்னுர். இங்கே திருச்யம் மறைந்ததும் மிஞ்சும் திருக்தான் பிரஹ்மம், வேறில்லை என்பதை எடுத்துக்காட்டு கிறுர்.] **(44)**

**परोक्षं शास्त्रजं ज्ञानं विज्ञानं चात्मदर्शनम् ।**
**आत्मनो ब्रह्मण: सम्यगुपाधिद्वयवर्जितम् ॥ ४५ ॥**

**பரோக்ஷம் ஶாஸ்த்ரஜம் ஜ்ஞானம் விஜ்ஞானம் சாத்மத³ர்ஶனம் ।**
**ஆத்மனோ ப்³ரஹ்மணః ஸம்யகு³பாதி⁴த்³வயவர்ஜிதம் ॥ 45 ॥**

| | | |
|---|---|---|
| **शास्त्रजं** **ஶாஸ்த்ரஜம்** | - | சாஸ்திராப்யாஸத்தினால் ஏற்பட்டு, |
| **परोक्षं** **பரோக்ஷம்** | - | பரோக்ஷமாய் (வெளியிலுள்ளதாய்) அறியும் ஞானம், |
| **ज्ञानं** **ஜ்ஞானம்** | - | ஞானம், |
| **आत्मनः** **ஆத்மனः** | - | ஆத்மாவினுடையவும், |
| **ब्रह्मणः** **ப்³ரஹ்மணः** | - | பிரஹ்மத்தினுடையவும், |
| **सम्यक्** **ஸம்யக்** | - | பூராவாக, |
| **उपाधिद्वयवर्जितम्** **உபாதி⁴த்³வயவர்ஜிதம்** | - | (ஆத்மாவின் உபாதியான அவித்யை, பிரஹ்மத்தின் உபாதியான மாயை ஆகிய) இரண்டு உபாதிகளையும் விலக்கி, |
| **आत्मदर्शनं** **ஆத்மத³ர்ஶனம்** | - | (சுத்த சைதன்யஸ்வரூபமான) ஆத்மாவை ஸாக்ஷாத்தாக பார்ப்பது, |
| **विज्ञानं** **விஜ்ஞானம்** | - | விக்ஞானம். |

3. சாஸ்திராப்பியாஸத்தினால் ஏற்பட்டு பரோக்ஷமாய் வெளியிலுள்ளதாய் அறியும் ஞானம் ஞானம். ஆத்மாவினுடையவும் ப்ரஹ்மத்தினுடையவும் பூராவாக, ஆத்மாவின் உபாதியான அவித்யை, ப்ரஹ்மத்தின் உபாதியான மாயை, ஆகிய இரண்டு உபாதிகளையும் விலக்கி (சுத்த சைதன்ய ஸ்வரூபமாக) ஆத்மாவை ஸாக்ஷாத்தாக பார்ப்பது விக்ஞானம்.

[ உபாதிகளை விலக்கினால் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்படும் என்று மாத்திரம் கிரந்தங்களை வாசித்துத் தெரிந்துகொள்வது ஞானம். உபாதிகளை விலக்கியேவிட்டு சுத்தமான ஆத்மாவை நேராக அனுபவிப்பது விக்ஞானம்.] **(45)**

**त्वमर्थविषयं ज्ञानं विज्ञानं तत्पदाश्रयम् ।**
**पदयोरैक्यबोधस्तु ज्ञानविज्ञानसंज्ञितम् ॥ ४६ ॥**

**த்வமர்த²விஷயம் ஜ்ஞானம் விஜ்ஞானம் தத்பதா³ஶ்ரயம் ।**
**பத³யோரைக்யபோ³த⁴ஸ்து ஜ்ஞானவிஜ்ஞானஸஞ்ஜ்ஞிதம் ॥ 46 ॥**

| | | |
|---|---|---|
| **त्वमर्थविषयं**<br>**த்வமர்த2விஷயம்** | - | நீ என்கிற பதத்தின் அர்த்தமான ஆத்மா வின் ஸ்வரூபத்தை விஷயமாயுள்ளது, |
| **ज्ञानं**<br>**ஜ்ஞானம்** | - | ஞானம், |
| **तत्पदाश्रयम्**<br>**தத்பதா3ஶ்ரயம்** | - | அது என்கிற பதத்தின் அர்த்தமான ஈசுவர னின் ஸ்வரூபத்தை விஷயமாயுள்ளது, |
| **विज्ञानं**<br>**விஜ்ஞானம்** | - | விக்ஞானம், |
| **पदयोः**<br>**பத3யோ:** | - | நீ என்கிற பதம், அது என்கிற பதம், இவ்விரண்டினாலும் குறிக்கப்படும் வஸ்து, |
| **ऐक्यबोधः तु**<br>**ஐக்யபோ3த4: து** | - | ஒன்றுதான் என்று உணர்வதே, |
| **ज्ञानविज्ञानसंज्ञितम्**<br>**ஜ்ஞானவிஜ்ஞானஸஞ்ஜ்ஞிதம்** | - | ஞானவிக்ஞானம் எனப்படும். |

**4.** நீ என்கிற பதத்தின் அர்த்தமான ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்வது ஞானம். அது என்கிற பதத்தின் அர்த்தமான ஈசுவர ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்வது விக்ஞானம். நீ என்கிற பதம் அது என்கிற பதம், இவ்விரண்டினுலும் குறிக்கப்படும் வஸ்து ஒன்றுதான் என்று உணர்வதே ஞான விக்ஞானம் எனப்படும்.

[ "தத் த்வம் அஸி" என்கிற மஹாவாக்கியத்தில் த்வம் என்பது ஜீவனையும், தத் என்பது ஈசுவரனையும் அஸி என்பது இரண்டின் ஐக்கியத்தையும் குறிக்கின்றன. அந்த மஹா வாக்கியத்தின் அர்த்தத்தையொட்டி, த்வம் என்ற பதத்தின் அர்த்தத்தை சோதித்து அதன் உள் அர்த்தத்தைத் தெரிந்துகொள்வது ஞானம் என்றும், தத் என்ற பதத்தின் அர்த்தத்தை சோதித்து அதன் உள் அர்த்தத்தை தெரிந்துகொள்வது விக்ஞானம் என்றும், இரண்டு பதங்களின் உள் அர்த்தங்களான பிரத்யகாத்மாவும் பிரஹ்மமும் வாஸ்தவத்தில் ஒன்றுதான் என்று அறிந்துகொள்வது ஞான விக்ஞானம் என்றும் சொல்லலாம்.] **(46)**

## आत्मानात्मविवेकं च ज्ञानमाहुर्मनीषिणः ।
## अज्ञानं चान्यथा लोके विज्ञानं तन्मयं जगत् ॥ ४७ ॥

**ஆத்மானாத்மவிவேகம் ச ஜ்ஞானமாஹுர்மனீஷிண: ।**
**அஜ்ஞானம் சான்யதா2 லோகே விஜ்ஞானம் தன்மயம் ஜக3த் ॥ 47 ॥**

| | | |
|---|---|---|
| **आत्मानात्मविवेक**<br>**ஆத்மானாத்மவிவேக** | - | ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்து அறிவதே, |
| **ज्ञानं**<br>**ஜ்ஞானம்** | - | ஞானம் என்று, |

| | | |
|---|---|---|
| **मनीषिण:**<br>**மனீஷிண:** | - | அறிவாளிகள், |
| **आहु:**<br>**ஆஹு:** | - | சொல்வார்கள், |
| **लोके**<br>**லோகே** | - | உலகத்தில், |
| **अज्ञानं**<br>**அஜ்ஞானம்** | - | அக்ஞாநம் என்பது, |
| **अन्यथा च**<br>**அன்யதா² ச** | - | மாற்றி அறிவது (ஆத்மாவையும் அநாத்மாவையும் பிரிக்காமல் ஒன்றாகவே கலந்து அறிவது) ஆகும். |
| **जगत्**<br>**ஜக³த்** | - | பிரபஞ்சமானது, |
| **तन्मयं**<br>**தன்மயம்** | - | அதினாலேயே (அக்ஞானத்தினாலேயே) ஏற்பட்டது என்று அறிவது, |
| **विज्ञानं**<br>**விஜ்ஞானம்** | - | விக்ஞானம் எனப்படும். |

**5.** ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரித்து அறிவதே ஞானம் என்று அறிவாளிகள் சொல்வார்கள். உலகத்தில் அக்ஞானம் என்பது மாற்றி அறிவது அதாவது ஆத்மாவையும் அனாத்மாவையும் பிரிக்காமல் ஒன்றாகவே கலந்து அறிவது ஆகும். பிரபஞ்சமானது அக்ஞானத்தினாலேயே ஏற்பட்டது என்று அறிவது விக்ஞானம் எனப்படும்.

[ உலகத்தில் ஆத்மா என்றும் அநாத்மா என்றும் இரண்டு பதார்த்தங்கள் இருப்பதாக வைத்துக்கொண்டு அததன் லக்ஷணங்களை அறிந்து பிரித்து அறிவது ஞானம் என்றும், ஆத்மாவைத்தவிர இரண்டாவது பதார்த்தமாகத் தோன்றுகிற அநாத்மாவான ஜகத் அக்ஞானத்தினாலேயே தோன்றுகிறபடியால் வாஸ்தவமாக இரண்டாவது பதார்த்தமே இல்லை என்று அறிவது விக்ஞானம் என்றும், இங்கு சொல்கிறார்.] **(47)**

**अन्वयव्यतिरेकाभ्यां सर्वत्रैकं प्रपश्यति ।**
**यत् तत् तु वृत्तिजं ज्ञानं विज्ञानं ज्ञानमात्रकम् ॥ ४८ ॥**

**அன்வயவ்யதிரேகாப்⁴யாம் ஸர்வத்ரைகம் ப்ரபஶ்யதி ।**
**யத் தத் து வ்ருத்திஜம் ஜ்ஞானம் விஜ்ஞானம் ஜ்ஞானமாத்ரகம் ॥ 48 ॥**

**सर्वत्र** - எல்லாவிடத்திலும்,

**ஸர்வத்ர**

**अन्वयव्यतिरेकाभ्यां** - அன்வயம் மூலமாகவும் வியதிரேகம்

**அன்வயவ்யதிரேகாப்⁴யாம்** மூலமாயும்,

**एकं** - ஒன்றுகவே இருப்பதை,

**ஏகம்**

**यत्** - எது,

**யத்**

**प्रपश्यति** - நன்கு அறிகிறதோ,

**ப்ரபஶ்யதி**

**तत् तु** - அதுவே,

**தத் து**

**वृत्तिजं** - விருத்தியினுல் உண்டான,

**வ்ருத்திஜம்**

**ज्ञानं** - ஞானம்,

**ஜ்ஞானம்**

**ज्ञानमात्रकं** - சுத்தமான அறிவாகவே இருப்பது,

**ஜ்ஞானமாத்ரகம்**

**विज्ञानं** - விக்ஞானம்.

**விஜ்ஞானம்**

6. எல்லாவிடத்திலும் அன்வயம் மூலமாயும் வியதிரேகம் மூலமாயும் ஒன்றுகவே இருப்பதை எது நன்கு அறிகிறதோ அதுவே விருத்தியினுல் உண்டான ஞானம். சுத்தமான அறிவாகவே இருப்பது விக்ஞானம்.

[உலகத்திலுள்ள பதார்த்தங்களை கவனிக்கையில் ஸத்தான ஆத்மாவின் வியாப்தி இருப்பதினுலேயே அவைகள் இருப்பதாகத் தோன்றுகின்றன. ஆத்மாவின் வியாப்தி இல்லாமல் போனுல் அவைகள் இல்லாமலே போய்விடுகின்றன, என்று இரண்டு விதமாயும் ஆத்மா ஒன்றுதான் வாஸ்தவமாக இருக்கும் வஸ்து என்று புத்தி விருத்தியினுல் உணர்வது ஞானம், இம்மாதிரி யுக்திகளுக்கு அவசியமில்லாமல் தன் அனுபவத்தினுலேயே ஸாக்ஷாத்தாக ஆத்மஸ்வரூபத்தை அறிவது விக்ஞானம்.] **(48)**

**अज्ञानध्वंसकं ज्ञानं विज्ञानं चोभयात्मकम् ।**
**ज्ञानविज्ञाननिष्ठेयं तत्सब्रह्मणि चार्पणम् ॥ ४९ ॥**

**அஜ்ஞானத்⁴வம்ஸகம் ஜ்ஞானம் விஜ்ஞானம் சோப⁴யாத்மகம் ।**
**ஜ்ஞானவிஜ்ஞானநிஷ்டே²யம் தத்ஸப்³ரஹ்மணி சார்பணம் ॥ 49 ॥**

| | | |
|---|---|---|
| **अज्ञानध्वंसकं** <br> **அஜ்ஞானத்⁴வம்ஸகம்** | - | அக்ஞானத்தைப் போக்கடிப்பது, |
| **ज्ञानं** <br> **ஜ்ஞானம்** | - | ஞானம், |
| **विज्ञानं च** <br> **விஜ்ஞானம் ச** | - | விக்ஞானமோ, |
| **उभयात्मकम्** <br> **உப⁴யாத்மகம்** | - | (அக்ஞானம், ஞானம், ஆக) இரண்டாகவும் இருக்கும் தன்மையுள்ளது, |
| **तत्सब्रह्मणि** <br> **தத்ஸப்³ரஹ்மணி** | - | அதுவாகவும் ஸத்தாகவுமுள்ள பிரஹ்மத்தினிடத்தில், |
| **अर्पणं च** <br> **அர்பணம் ச** | - | அக்ஞானம், ஞானம், இரண்டையும்) லயப்படுத்தி விடுவது என்பது எதுவோ, |
| **इथं** <br> **இத²ம்** | - | இது, |
| **ज्ञानविज्ञाननिष्ठा** <br> **ஜ்ஞானவிஜ்ஞானநிஷ்டா²** | - | ஞான விக்ஞானத்தில் நிலைத்தல் ஆகும். |

**7.** அக்ஞானத்தைப் போக்கடிப்பது ஞானம் விக்ஞானமோ அக்ஞானம், ஞானம், ஆக இரண்டாகவும் இருக்கும் தன்மையுள்ளது. அதுவாகவும் ஸத்தாகவுமுள்ள பிரஹ்மத்தினிடத்தில் அக்ஞானம், ஞானம், இரண்டையும் லயப்படுத்திவிடுவதுதான் ஞான விக்ஞானத்தில் நிலைத்தல் ஆகும்.

[ அக்ஞானத்தைப் போக்கடிக்கக்கூடிய தன்மை அக்ஞானத்திற்கு விரோதி யான, ஆத்மஸ்வரூபத்தை விஷயீகரிக்கும் புத்தி விருத்திக்குத்தான் உண்டு. அதுவே ஞானம் என்பது. அக்ஞானமோ, இந்த புத்தி விருத்தியோ இரண்டிற்கும் ஸத்தை யைக் கொடுப்பது ஆத்மா என்று அறிவது விக்ஞானம். அக்ஞானத்தையும், அதைப் போக்கடிக்கும் விருத்தி ஞானத்தையும் பிரகாசிக்கும்படிச் செய்யும் சுத்த சைதன்யத் தை மாத்திரம் அறிவது ஞான விக்ஞானம் என்பது

இவ்விதமாக ஞானம் என்ற பதத்திற்கும் விக்ஞானம் என்ற பதத்திற்கும் ஏழுவிதமாக தாத்பர்யம் சொல்லப்பட்டது. எந்த விதத்தை எடுத்துக்கொண்டாலும் ஞானத்திற்கு மேல்படி விக்ஞானம் என்ற அம்சம் பொது.] **(49)**

(அவதாரிகை) ஆத்மஞானிக்கும் ஸதாசாரமுண்டென்று நிரூபணம் செய்ய வாரம்பித்து 16 வது சுலோகத்தில் ஸன்யாஸியின் தன்மை அவனிடமுண்டென்று காண்பித்துவிட்டு ஸன்யாஸியால் அடைய வேண்டிய ஆத்மஞானத்தைப்பற்றி இதுவரை விஸ்தாரமாக வர்ணித்து வந்தார். இப்பொழுது ஒரு சுலோகத்தினுல் குணங்களுக்கும் ஆத்மாவுக்குமுள்ள ஸம்பந்தத்தை சொல்லிவிட்டு, ஆத்மஞானி ஸன்யாஸி என்பதுமட்டுமல்ல, அவனை பிரஹ்மசாரீ என்றும் சொல்லலாம், கிருஹஸ்தன் என்றும் சொல்லலாம், வானப்பிரஸ்தன் என்றும் சொல்லலாம்,

அதிவர்ணாச்ரமீ என்றும் சொல்லலாம், என்று மேல் சுலோகங்களால் எடுத்துக் காட்டுகிறுர்: -

**भोक्ता सत्वगुणः शुद्धो भोगानां साधनं रजः ।**
**भोग्यं तमोगुणः प्राहुरात्मा चैषां प्रकाशकः ॥ ५० ॥**

**போ⁴க்தா ஸத்வகு³ணঃ ஶுத்³தோ⁴ போ⁴கா³ணும் ஸாத⁴னம் ரஜঃ ।**
**போ⁴க்³யம் தமோகு³ணঃ ப்ராஹுராத்மா சைஷாம் ப்ரகாஶகঃ ॥ 50 ॥**

| | | |
|---|---|---|
| **शुद्धः**<br>**ஶுத்³த⁴ঃ** | - | சுத்தமான, |
| **सत्वगुणः**<br>**ஸத்வகு³ணঃ** | - | ஸத்வகுணமானது, |
| **भोक्ता**<br>**போ⁴க்தா** | - | அனுபவிக்கிறவன், |
| **रजः**<br>**ரஜঃ** | - | ரஜோகுணமானது, |
| **भोगानां**<br>**போ⁴கா³ணும்** | - | ஸுக துக்கங்களை அனுபவிக்க, |
| **साधनं**<br>**ஸாத⁴னம்** | - | ஸாதனம், |
| **तमोगुणः**<br>**தமோகு³ணঃ** | - | தமோ குணமானது, |
| **भोग्यं**<br>**போ⁴க்³யம்** | - | அனுபவிக்கப்படும் பதார்த்தம் என்றும், |
| **एषां च**<br>**ஏஷாம் ச** | - | இவைகளையெல்லாம், |
| **प्रकाशकः**<br>**ப்ரகாஶகঃ** | - | பிரகாசிக்கும்படி செய்கிறது, |
| **आत्मा**<br>**ஆத்மா** | - | ஆத்மா என்றும், |
| **प्राहुः**<br>**ப்ராஹுঃ** | - | சொல்கிறுர்கள். |

சுத்தமான ஸத்வகுணமானது அனுபவிக்கிறவன், ரஜோ குணமானது ஸுகதுக்கங்களை அனுபவிக்க ஸாதனம், தமோ குணமானது அனுபவிக்கப்படும் பதார்த்தம், இவைகளையெல்லாம் பிரகாசிக்கும்படி செய்கிறது ஆத்மா என்று சொல் கிறுர்கள்.

[சைதன்யமானது முக்குணங்களோடு ஸம்பந்தப்படும்போது ஸத்வத்தினுல் போக்தா என்றும், ரஜஸ்ஸினுல் போக ஸாதனம் என்றும் தமஸ்ஸினுல் போக்யம் என்றும் பிரிந்துவிடுகிறது. குழந்தை விரஂல சப்பும்போது, சப்புவது ஸுகத்தைக் கொடுக்கும் என்று நிஂனப்பதான ஆசை ரஜோகுணத்தினுலும், சப்புவதிலுள்ள ஸுகத்தை அனுபவிக்கிறவனுக ஆனது ஸத்வ குணத்தினுலும், சப்பப்படும் பதார்த்தமாக தானே ஆனது தமோ குணத்தினுலும் என்றிருப்பதை திருஷ்டாந்தமாக வைத்துக் கொள்ளலாம்.] **(50)**

## ब्रह्माध्ययनसंयुक्तो ब्रह्मचर्यारितः सदा ।
## सर्वं ब्रह्मेति यो वेद ब्रह्मचारी स उच्यते ॥ ५१ ॥

**ப்³ரஹ்மாத்⁴யயனஸம்யுக்தோ ப்³ரஹ்மசர்யாரித꞉ ஸதா³ ।**
**ஸர்வம் ப்³ரஹ்மேதி யோ வேத³ ப்³ரஹ்மசாரீ ஸ உச்யதே ॥ 51 ॥**

**ब्रह्माध्ययनसंयुक्तः** - ப்ரஹ்மத்தை உபதேசிக்கும் உபநிஷத்தை
**ப்³ரஹ்மாத்⁴யயனஸம்யுக்த꞉** அத்யயனம் செய்துகொண்டு,
**सदा** - எப்பொழுதும்,
**ஸதா³**
**ब्रह्मचारीतः** - ப்ரஹ்மசர்யத்தில் ஈடுபட்டு,
**ப்³ரஹ்மசாரீத꞉**
**सर्वं ब्रह्मेति** - எல்லாம் ப்ரஹ்மம் என்று,
**ஸர்வம் ப்³ரஹ்மேதி**
**यो वेद** - எவன் அறிந்துகொள்கிறானே,
**யோ வேத³**
**सः** - அவன்,
**ஸ꞉**
**ब्रह्मचारी** - ப்ரஹ்மசாரி என்று,
**ப்³ரஹ்மசாரீ**
**उच्यते** - சொல்லப் படுகிறுன்.
**உச்யதே**

எப்பொழுதும் ப்ரஹ்மசர்ய நியமத்துடன் வேதத்தை அத்யயனம் செய்பவன் ப்ரஹ்மசாரி எனப்படுவான். எல்லாம் ப்ரஹ்மம் என்று அறிந்த ஞானியும் ப்ரஹ்ம த்தை உபதேசிக்கும் உபநிஷத்தை ஜபித்துக்கொண்டு ப்ரஹ்மசர்ய நியமத்துடனிருப்ப தால் ப்ரஹ்மசாரி எனப்படுகிறுன். **(51)**

## गृहस्थी गुणमध्यस्थः शरीरं गृहमुच्यते ।
## गुणाः कुर्वन्ति कर्माणि नाहं कर्तेति बुद्धिमान् ॥ ५२ ॥

**க்³ருஹஸ்தீ² கு³ணமத்⁴யஸ்த²: ஶரீரம் க்³ருஹமுச்யதே ।**
**கு³ணை: குர்வந்தி கர்மாணி நாஹம் கர்தேதி பு³த்³தி⁴மான் ॥ 52 ॥**

| | | |
|---|---|---|
| **गुणमध्यस्थ:** கு³ணமத்⁴யஸ்த²: | - | குணங்களின் நடுவிலிருந்துகொண்டு, (ஆனால்) |
| **कर्माणि** கர்மாணி | - | கர்மாக்களை, |
| **गुणा:** கு³ணை: | - | குணங்கள்தான், |
| **कुर्वन्ति** குர்வந்தி | - | செய்கின்றன, |
| **अहं** அஹம் | - | நான், |
| **कर्त** கர்த | - | செய்கிறவன், |
| **न** ந | - | அல்ல, |
| **इति** இதி | - | என்று, |
| **बुद्धिमान्** பு³த்³தி⁴மான் | - | அறிந்தவன், |
| **गृहस्थ:** க்³ருஹஸ்த²: | - | கிருஹஸ்தன் ஆகிறான். இந்த ஆத்ம ஞானிக்கு, |
| **शरीरं** ஶரீரம் | - | சரீரமே, |
| **गृहं** க்³ருஹம் | - | வீடு என்று, |
| **उच्यते** உச்யதே | - | சொல்லப்படுகிறது. |

[வீட்டில் இருந்துகொண்டு ஸத்வ ரஜஸ் தமோ குணங்களின் மத்தியில் அவைகளால் ஏவப்பட்டு காரியங்களைச் செய்து வருபவன் கிருஹஸ்தனாவான். இந்த ரீதியில் ஞானியும் கிருஹஸ்தனே. ஞானிக்கு சரீரமே வீடு. சரீரமென்னும் வீட்டில் இருக்கிறான். சரீரத்தைக்காட்டிலும் வேறான ஆத்மாவை அறிந்தவன் தான் சரீரத்தில் இருப்பதாகக் கூறமுடியும். சரீரத்தையே நான் என எண்ணுபவன் சரீரத்தில் இருப்பதாகக் கூறமுடியாது. ஞானியும் குணங்களின் நடுவில் இருக்கிறான். ஆனாலும் அக்ஞானி போல குணங்களுக்கு வசப்பட்டு கர்மாக்களைச் செய்யவில்லை.

குணங்கள் தான் கர்மாக்களைச் செய்கின்றன. நான் ஒன்றும் செய்யவில்லை நான் அகர்த்தா என்று அறிபவன் ஞானி.] **(52)**

## किमुग्रैश्च तपोभिः स्यात् यस्य ज्ञानमयं तपः ।
## हर्षामर्षविनिर्मुक्तो वानप्रस्थः स उच्यते ॥ ५३ ॥

**கிமுக்³ரைஶ்ச தபோபி⁴꞉ ஸ்யாத் யஸ்ய ஜ்ஞானமயம் தப꞉ ।**
**ஹர்ஷாமர்ஷவிநிர்முக்தோ வானப்ரஸ்த²꞉ ஸ உச்யதே ॥ 53 ॥**

| | | |
|---|---|---|
| **यस्य** <br> **யஸ்ய** | - | எவனுக்கு, |
| **ज्ञानमयं** <br> **ஜ்ஞானமயம்** | - | ஞானமயமான, |
| **तपः** <br> **தப꞉** | - | தபஸ் இருக்கிறதோ அவனுக்கு, |
| **उग्रैः** <br> **உக்³ரை꞉** | - | உக்கிரமான, |
| **तपोभिः च** <br> **தபோபி⁴꞉ ச** | - | தபஸ்களினால், |
| **किं** <br> **கிம்** | - | என்ன பிரயோஜனம், |
| **स्यात्** <br> **ஸ்யாத்** | - | ஏற்படும்? |
| **हर्षामर्षविनिर्मुक्तः** <br> **ஹர்ஷாமர்ஷவிநிர்முக்த꞉** | - | ஸந்தோஷம், வெறுப்பு இவைகளிலிருந்து நன்கு விடுபட்ட, |
| **सः** <br> **ஸ꞉** | - | அவன், |
| **वानप्रस्थः** <br> **வானப்ரஸ்த²꞉** | - | வானப்பிரஸ்தன் என்று, |
| **उच्यते** <br> **உச்யதே** | - | சொல்லப்படுகிறான். |

எவனுக்கு ஞானமயமான தபஸ் இருக்கிறதோ அவனுக்கு உக்கிரமான தபஸ்களினால் என்ன பிரயோஜனம்? ஸந்தோஷம், வெறுப்பு இவைகளிலிருந்து நன்கு விடுபட்டவன் வானப்ரஸ்தன் என்று சொல்லப்படுகிறான்.

[ஆத்மஞானியிடம் ஞானமயமான தபஸ் இருப்பதாலும் ஸந்தோஷம், வெறுப்பு இவைகள் இல்லாததாலும் இவனும் வானப்பிரஸ்தன் ஆவான்.] **(53)**

## स गृही यो गृहातीतः शरीरं गृहमुच्यते ॥ ५४ ॥

**ஸ க்³ருஹீ யோ க்³ருஹாதீத꞉ ஶரீரம் க்³ருஹமுச்யதே ॥ 54 ॥**

| | | |
|---|---|---|
| **यः**<br>**ய꞉** | - | எவன், |
| **गृहातीतः**<br>**க்³ருஹாதீத꞉** | - | கிருஹத்திற்கு மேல்பட்டவனே, |
| **सः**<br>**ஸ꞉** | - | அவன்தான், |
| **गृही**<br>**க்³ருஹீ** | - | கிருஹத்திற்கு யஜமானன், |
| **शरीरं**<br>**ஶரீரம்** | - | சரீரமே, |
| **गृहं**<br>**க்³ருஹம்** | - | கிருஹம் என்று, |
| **उच्यते**<br>**உச்யதே** | - | சொல்லப்படுகிறது. |

எவன் கிருஹத்திற்கு மேல்பட்டவன அவன்தான் கிருஹத்திற்கு யஜமானன். சரீரமே கிருஹம் என்று சொல்லப்படுகிறது.

[ வீட்டு யஜமானன் வீட்டை தான் என்று நினைப்பது கிடையாது. வீடு வேறு, தான் வேறு, என்றே நினைப்பான். அப்படியே ஆத்ம ஞானி சரீரத்தில் ஆத்மாவென்கிற எண்ணம் வைக்காமல், தான் அதை விட வேறு, அதற்கு அதீதமானவன் என்றே உணர்ந்தவன். ஆகையால் சரீரத்திற்குரிய வர்ணாசிரமங்கள் தனக்குச் சேர்ந்தவை யல்லவென்ற உணர்ச்சி இருக்கும். அவனே அதிவர்ணாசிரமியும் ஆவான்.] **(54)**

## सदाचारमिमं नित्यं योऽनुसंदधते बुधः ।
## संसारसागराच्छीघ्रं स मुक्तो नात्र संशयः ॥ ५५ ॥

**ஸதா³சாரமிமம் நித்யம் யோ(அ)னுஸந்த³த⁴தே பு³த⁴꞉ ।**
**ஸம்ஸாரஸாக³ராச்சீ²க்⁴ரம் ஸ முக்தோ நாத்ர ஸம்ஶய꞉ ॥ 55 ॥**

| | | |
|---|---|---|
| **इमं**<br>**இமம்** | - | இந்த, |
| **सदाचारं**<br>**ஸதா³சாரம்** | - | ஸதாசாரத்தை, |
| **यः**<br>**ய꞉** | - | எந்த, |

**बुधः** - அறிவாளி,
**பு³த⁴:**

**नित्यं** - எப்பொழுதும்,
**நித்யம்**

**अनुसंदधते** - அனுஸந்தானம் செய்கிறனே,
**அனுஸந்த³த⁴தே**

**सः** - அவன்,
**ஸ:**

**शीघ्रं** - சீக்கிரமாக,
**ஶீக்⁴ரம்**

**संसारसागरात्** - ஸம்ஸார ஸமுத்திரத்திலிருந்து,
**ஸம்ஸாரஸாக³ராத்**

**मुक्तः** - விடுபடுகிறன்,
**முக்த:**

**उत्र** - இவ்விஷயத்தில்,
**உத்ர**

**संशयः** - சந்தேகம்,
**ஸம்ஶய:**

**न** - இல்லை.
**ந**

இந்த ஸதாசாரத்தை எந்த அறிவாளி எப்பொழுதும் அனுஸந்தானம் செய்கிறனே அவன் சீக்கிரமாக ஸம்ஸார சமுத்திரத்திலிருந்து விடுபடுகிறன். இவ்விஷயத்தில் ஸந்தேஹமில்லை. **(55)**

## ஸதா³சாரானுஸந்தா⁴னம் முற்றும்.